






| | |
|---|---|
| சாதி | கள்ளர் சாதி |
| ஆயுள் | 105 ஆண்டுகள் |
| வைகுண்ட பிராப்தி அடைந்த ஊர் | திருக்குறுங்குடி |
| பயணம் மேற் கொண்ட திருத்தலங்கள் | திருவல்லிக்கேணி, திருவள்ளூர், திருநீர் மலை, திருவேங்கடம், பத்ரிகாஸ்ரமம், நைமிசாரண்யம், சாலிக்கிராமம், திருவிண்ணகர், திருக்குடந்தை, திருக்கண்ணபுரம், திருநரையூர் முதலிய திருத்தலங்கள். |
| படைப்புகள் | பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருஎழுக் கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் மொத்த பாசுரங்களின் எண்ணிக்கை 1361 |
| வதந்திகள் | 1. விஷ்ணுவின் சாரங்கம் என்ற வில்லின் அம்சமாக அவதரித்தார்.<br>2. காஞ்சிபுரத்திலுள்ள ஓர் இடத்தில் புதையல் இருப்பதை தமது தெய்வீகச் சக்தி மூலம் அறிந்து, அந்தப் புதையல் பணத்தைக் கொண்டு சோழ மன்னருக்கு தமது கப்பத் தொகையைக் கட்டினார்.<br>3. பரகாலனை ஆட்கொள்ளும் பொருட்டு எம்பெருமானும், பிராட்டியாரும், புதுமணத் தம்பதிகள் வேடத்தில் வந்து, இவருக்கு அஷ்டாக்ஷர மந்திரத்தை உபதேசித்தருளினார்.<br>4. 105 ஆண்டுகள் வரை வாழ்ந்த பின்னர் பரமபதம் அடைந்தார். |

### நூல் அடைவு

| | | |
|---|---|---|
| நூற் பெயர் | : | குரு பரம்பரைப் பிரபாவம் |
| செந்தமிழாக்கம் | : | டாக்டர் எஸ். ஜெகத்ரட்சகன் |
| உரிமை | : | ஆழ்வார்கள் ஆய்வு மையம் சென்னை - 17 |
| மொழி | : | தமிழ் - உரைநடை |
| பதிப்பு | : | முதற்பதிப்பு - 1994<br>இரண்டாம் பதிப்பு - 2009 |
| தாள் | : | ஒரிஜினல் ஷேடு மேப் லித்தோ |
| அளவு | : | டெம்மி (21.5 x 14 செ.மீ) |
| பக்கம் | : | 8 + 304 = 312 |
| விலை | : | ரூபாய் 200.00 |
| ஒளியச்சு | : | வேமன் பிரிண்டர்ஸ் சென்னை - 34 |
| அச்சிட்டோர் | : | மணி ஆஃப்செட் பிரிண்டர்ஸ் சென்னை - 5 |
| வெளியீடு | : | ஆழ்வார்கள் ஆய்வு மையம்<br>29, திலக் தெரு<br>சென்னை - 600 017. |

Sambatiyar

## திருமங்கை ஆழ்வார்

நாலு கவிப்பெருமாள் நீலன் நாரண
மாலுக்கு உவந்த மணிவண்ணன் - காலுக்கு
வாடினேன் வாடி வருந்தினேன் என்றெடுத்துப்
பாடினான் தீவினைகள் பாழ்!

திருமால் திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள திருவாலி என்றும் ஊருக்கு அருகிலுள்ள திருக்குறையலூர் என்னும் நகருக்கு அரசனும் கள்ளர் மரபின் தலைவனும் செல்வமும் பக்தி பூண்ட சைவனுமான நீலனுக்கு, திரு வில்லின் கூறாகக் கலியுகம் 398-ம் ஆண்டு, நள வருடம், கார்த்திகை மாதம், வியாழக்கிழமை, திருக் கார்த்திகை நட்சத்திரத்தில் திருமங்கை ஆழ்வார் தோன்றினார். இவருடைய தந்தை நீலன் கணியரைக் கொண்டு இவருடைய வாழ்வை கணித்தார். குல மரபுக்கேற்ப இவருக்கும் நீலன் என்னும் பெயரிட்டு செல்வமாக வளர்த்து வந்தான். இளம் வயதிலேயே நீலன் கல்வி கேள்விகளிலும், யானை யேற்றம், குதிரை யேற்றம், வில், வாள், வேல் முதலிய பயிற்சிகளிலும், மற்போரிலும் தேர்ந்து தோள்வலி யில் சிறந்து விளங்கினான்.

தந்தை காலமான பின், மகன் நீலனுடைய தோள் வலிமையை யும், பெருமையையும் அறிந்த சோழ அரசன், அவனுக்கு மேலும் ஒரு நாட்டையும் வேண்டிய படைகளையும் கொடுத்து அரசனாக்கி னான். அரச வாழ்வில் ஈடுபட்ட நீலன் இறைநிலையில் பற்றின்றி உலக இன்பங்களில் மிக்க பற்றுடையவனாய் இருப்பதைக் கண்டு அவனைத் திருத்தித் தன் திருச்சேவையாளனாக்கத் திருவுளம் கொண் டான் எம்பெருமான்.

ஆண்டுகள் பல கழிந்தன. திருநாங்கூரில் வாழும்

| | | | | |
|---|---|---|---|---|
| *Middle.* | Namm Āḻvār... | ... | B.C. | 3102 |
| | Madhurakavi | ... | " | 3102 |
| | Kulaśēkhara ... | ... | " | 3075 |
| | Periy Āḻvār ... | ... | " | 3056 |
| | Āṇḍāḷ ... | ... | " | 3005 |
| *Last* ... | Toṇḍaraḍippoḍi | ... | " | 2814 |
| | Tiruppāṇ Āḻvār | ... | " | 2760 |
| | Tirumangai Āḻvār | ... | " | 2706 |

Disregarding these apparently definite dates, in which, however, most Tamil works, particularly those of a religious character, are peculiarly weak, it is still possible to regard *this traditional order* as fairly in chronological sequence. Even the Vaishṇava hagiologists have very little to say about the first group. Their information about the second is meagre, while of the third they have something to say that might be historical. The name at the head of the paper is the very last, and there are certain facts concerning him, which cannot lightly be passed over by any one who would try to examine the chronology of the Āḻvārs.

*Tirumangai Āḻvār* is the author of the largest number (1,361 stanzas) of the 4,000 verses of the Vaishṇava *Prabhandam*, *Namm Āḻvār* coming next with a number almost as great. He belonged to the *Kaḷḷar Caste* and was born at Kurugūr in Āli Nāḍu in the Shiyāli taluka of the *Tanjore District*. There he pursued, when he grew up to man's estate, the profession of his father, which was of a duplex character—the government of a small district

(1) மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளுமிவ்
வையந் தன்னொடுங் கூடுவ தில்லையான்
ஐயனே யரங்கா வென் றழைக்கின்றேன்
மையல்கொண் டொழிந்தே னென்றன் மாலுக்கே.

(2) பிறையேறு சடையானும் பிரமனு மிந்திரனும்
முறையாய பெருவேள்விக் குறைமுடிப்பான் மறையா
வெறியார்தண் சோலைத்திருவேங் கடமலைமேல் [னான்
நெறியாய்க் கிடக்கும் நிலையுடையே னாவேனே.

(3) வாளா லறுத்துச் சுடினு மருத்துவன்பால்
மாளாத காதல் நோயாளன்போல் மாயத்தால்
மீளாத் துயர்தரினும் வித்துவக்கோட் டம்மாநீ
ஆளா வுனதருளே பார்ப்ப னடியேனே.

## Tirumangai Alvar.

The third Alvar of the Chola country was Kaliyan or Tirumangai Mannan. He was the foremost of all the Vaishnava saints and has left behind the greatest number of hymns on Vishnu shrines. Further, there are sufficient materials in his writings to work out his date with greater certainty, and to arrive at the conclusion that he was one of the most learned of all Alvars. His life and work should, therefore, be given here with fuller details.

Tirumangai Alvar was born of a Kalla family at Tirukkurayalur in the Tanjore district. His parents named him Kaliyan or Kalikanri. It appears that he held the office of generalissimo under the Chola kings and that he was the feudal chieftain of a small district

ஆழ்வாருக்கு அருளிய அருளாளன்:

நூற்றுக்கும் மேற்பட்ட பாடல்களால் நறையூரானை பாடியிருக்கிறார் திருமங்கை மன்னன். ஏன் இவர்மீது மட்டும் இவ்வளவு ஈடுபாடு திருமங்கை ஆழ்வாருக்கு? ஆழ்வாரின் வரலாற்றை பார்ப்போம்.

நீலன் என்ற பெயரில் சோழமன்னனின் படைத்தளபதியாய் இருந்து தனது வீரத்தால் குறுநில மன்னனாக உயர்ந்தவர் திருமங்கை ஆழ்வார். குமுதவல்லி என்ற பெண்ணைக் கண்டதும் காதல். தன் விருப்பத்தை அவளிடம் தெரிவிக்க, குமுதவல்லி, "நான் வைணவ அடையாளங்களை தாங்கி வைணவனாய் வாழும்



ஒருவருக்கே மாலையிடுவேன்" என்கிறார். ஆழ்வார் கள்ளர் மரபைச் சேர்ந்தவர்.

திருநறையூர் பெருமாளிடம் சென்று வைணவ அடையாளங்களை (பஞ்ச ஸம்ஸ்காரம்) இடுமாறு இறைஞ்சுகிறார் திருமங்கை மன்னன். நின்ற நம்பியும் அவ்வாறே வைணவ அடையாளங்களை ஆசானாக இருந்து ஆழ்வாருக்கு இடுகிறார்.

குருவிடமிருந்து சீடனாக ஒரு வைணவன் பெறவேண்டிய முக்கியமான ஐந்து அடையாளங்கள்:
* 12 திருமண்கள் இட்டுக் கொள்ளும் வகை பெறுதல்.

## *திருமங்கையாழ்வார் வேடுபறி*

### *ஸ்ரீரங்கம் வேடுபறி*

*ஸ்ரீரங்கம் பகுதில் வேடுபறி " உற்சவத்தில் வலையர்கள் அதிகம் கலந்துகொள்வதால் திருமங்கையாழ்வார் தங்கள் இனமாக கூறிவருகின்றனர். ஆனால் ஆழ்வார் கொள்ளையடித்து, உபதேசம் பெற்ற சம்பவத்தை மையமாக வைத்து நடத்தப்படும் உற்சவத்துக்கு பெயர் "திருவேடுபறி" உற்சவம். இன்றும் பல திவ்ய தேசங்களில் நடைபெறுகிறது உதாரணம் ஸ்ரீரங்கம், திருவல்லிக்கேணி, மன்னார்குடி என பல ஊர்களில் நடைபெறுகிறது.*

*ஸ்ரீரங்கம் இராப்பத்து 8ஆம் நாள், திருமங்கை ஆழ்வார் வேடுபறி (வேடர்பறி!) பெரிய கோவில் ஆலிநாடன் திருவீதி (ஆலிநாடனான திருமங்கை ஆழ்வார் அமைத்தது ), உள் மணல்வெளியில் நடைபெறும். அங்கே 'கோண வையாளி' என்னும் குதிரை ஓட்டம் செய்வார் . தெற்கு,வடக்காக நூறு மீட்டர் தூரம் மூன்று முறை வேகமாக ஓடுவார்.பின்னர் ஒரு வட்டமாக 20/30 மீட்டர் தூரம் மூன்று முறை வேகமாகச் சுற்றி வருவார் . இந்தக் கோண வையாளி சமயத்தில் நம்பெருமாளின் நிரந்தர ஸ்ரீபாதம் தாங்கிகள் தாங்காமல் ,ஸ்ரீரங்கத்து ஸ்ரீவைஷ்ணவ இளைஞர்கள் கூட்டமாக வந்து மிகுந்த குதூகலத்துடன் தாங்கிக் கொண்டு ஓடுவார்கள்.*




*குதிரைக்கு (வாகனத்துக்கு) கடலைச்சுண்டலும், நம்பெருமாளுக்குப்பானகமும், "விடாய்பருப்பும்" ( ஊறவைத்த பாசிப்பருப்பு ) நிவேதனம் செய்யப்படும் . பெரிய கோவில் கள்ளர் மிராசுக் காரர்கள் , பரம்பரை பரம்பரையாக காவல் காப்பவர்கள் இருந்தா ர்கள். ஆனால் இப்போது அறநிலையத் துறையினர் (!) ) நம்பெருமாளை வலம் வந்து எல்லாம் சரியாக இருக்கிறதா, என்று பார்த்துச் செல்வார்கள்.*




*திருமங்கை மன்னர் 'நீலன்' (ஆழ்வார்) ராஜ அலங்காரத்தில் கம்பீரமாக வருவார் . வலது கண்ணோ ரத்தின் கீழ் வைத்த பிடியும் , தாழ்ந்த தோளும், மடித்த இடக்காலும், மண்டிபோட்ட வலக்காலும், சக்கரமாய் வளைத்த வில்லுடன் வந்து , நம்பெருமாளும், கைங்கர்ய பரர்களும் விழித்துக் கொண்டு இருக்கிறார்களா? தூங்குகி றார்களா ? என்று துப்பறிந்து போவார் . அவருடைய பரிஜனங்களாக , திருமங்கையாழ்வார் அவதரித்த கள்ளர் குலத்தினர்பலரும் , சந்திரபுஷ்கரணி பக்கமிருந்து, கத்தி,வேல், நீண்ட தடிகள், தீப்பந்தங்கள் ஆகியவற்றைத் தூக்கிக் கொண்டு ஓடி வந்து நம்பெருமாளைப் சுற்றி, சுற்றி வந்து செல்வார்கள்.*



*துப்பறிந்த கலியன் தம் பரிஜனங்களோடு வந்து , நம்பெருமாளுடைய திவ்ய ஆபரணங்களையும், பொருட் களையும் கொள்ளையடித்துக் கொண்டு ஓடுவார். நம்பெருமாளின் காவலர்களும் ஓடிப்போய் , அவர்களைப் பிடிக்க முடியாமல் திரும்பி விடுவார்கள்.*

*ஸ்ரீரங்கம் ஸ்ரீராமாநுஜர் சந்நிதியில் ஸ்ரீவைகுண்ட ஏகாதசி அன்று ததியாராதனை கைங்கர்யத்தை இன்றும் அந்த ஊர் கள்ளர்கள் நடத்தி வருகிறார்கள் . கள்ளர் குடியில் பிறந்த இயற்கை வழி வேளாண் அறிஞர் பசுமை போராளி கோ .நம்மாழ்வார் பார்புரட்டியார் ஊரில் அரங்கனுக்கும், சம்பிரதாயத்திற்கும் பெரும் தொண்டாற்றிய குவளக்குடி சிங்கமய்யங்கார் பாடசாலையும் அதற்குண்டான நிலங்களும் இன்றும் உள்ளன . ஒரு காலத்தில் நாத்திக கோட்டையாக மாறியது . இன்றும் தங்கள் ஆச்சார்யனாக ஸ்ரீகூரத்தாழ்வான் திருவம்சத்தை சேர்ந்த ஸ்ரீபராசர பட்டர் ஸ்வாமிகளை இன்றளவும் கொண்டா டுகின்றனர். இன்றைய இளைய*

*தலைமுறையினரை மன்னார்குடி ஸ்ரீசெண்டலங்கார ஜீயர் ஸ்வாமிகள் அவர்கள் அந்த ஊருக்கு அடிக்கடி விஜயம் செய்து ஸ்ரீவைணவ கோட்பாட்டில் திளைக்க வழி காட்டி வருகிறார்கள்.*

## *மதுரை கள்ளழகர் கோயில் வேடுபறி*

*திருமங்கையாழ்வார் வேடுபறி என்னும் திருவிழா அழகர் கோவிலில் மார்கழி மாதத்தில் நடைபெறும் இன்றளவும் அத்திருவிழாவில் கள்ளர் வேடம் பூண்டு அதற்கான கோயில் மரியாதைகளை மேலநாட்டின் முக்கிய ஊரான மாங்குளம் கிராமத்தை சேர்ந்த கள்ளர்களே பெறுகிறார்கள்.*

*திருவாலி திருநகரியில் வேடுபறி மிகவும் சிறப்பானது.*

## *திருமங்கையாழ்வார்*

*மிலேச்ச குலத்தில் அல்லது நான்காவது வருணத்தில் அவதரித்த திருமங்கையாழ்வார் என்று ஸ்ரீ திருமங்கையாழ்வார் வைபவத்தின் விளக்கத்தினை ஒவொருவரும் மாற்றி எழுதியுள்ளனர்.*

*காராளர் கற்பகமான திருமங்கையாழ்வார் என்று சோழ கல்வெட்டில் குறிக்கப்படுகிறார். மிலேச்சர், காராளர், நான்காவது வருணம் என்பதற்கு பல பொருள் உள்ளன. மிலேச்சர், காராளர், நான்காவது வருணம் என்று வருவதால் இவரை வெளியில் இருந்து வந்தவர் என்றும் , காராளர் என்பதால் வெள்ளாளர் என்றும் எழுதிவருகின்றனர் . ஆனால் திருமங்கையாழ்வார் கள்ளர் மரபில் வந்தவர் என்று தெளிவாகவே குறிக்கப்பட்டுள்ளது.*

### *மிலேச்சர் என்பதற்கு விளக்கமாக : (மிலேச்ச குலத்தில்)*

*1) மஹாபாரதம் உத்யோக பர்வம் : - மலைகள் மற்றும் அணுகவியலாத காடுகளிலும் வசிப்பவர்களும், உயர்ந்த வம்ச வழியும் , வயதில் முதிர்ச்சியும் கொண்ட பல மிலேச்ச குல வீரர்கள் ஒன்றாகக் கூடி , பல்வேறு ஆயுதங்களைத் தாங்கிக் கொண்டு , பாண்டவர்களின் காரியத்திற்குத் தங்களை அர்ப்பணித்திருக்கிறார்கள்.*

*2) சிந்து சமவெளியில் (பலுச்சிஸ்தான்) இருந்து வந்தவர்கள் பெலுச்சர் (மிலேச்சர்) என அழைக்கப்பட்டனர்.*

*3) காவல் மரபினர் (தமிழ் அரசர்களுக்கு மெய்காப்பாளராக யவனர் , மிலேச்சர் ஆகியோர் காவல் புரிந்த செய்திகள் சங்க இலக்கியமான முல்லைப்பாட்டில் கூறப்பட்டுள்ளது . ("படம் புகு மிலேச்சர் உழையர் ஆக")*

*4) தேஜ்பூர் மிலேச்ச அரசமரபினர் திருமாலுக்கும் பூமாதேவிக்கும் பிறந்தவர் நரகாசுரன் வழித்தோன்றல்கள் என்று கூறி கொள்கின்றனர்.*

*5) வேற்று மொழி பேசும் ஆரியர் .*

*6) யயாதி மன்னன்நான்காவது மகன் , அனுவின் வழித்தோன்றல்கள் மிலேச்சர்கள் என்று அழைக்கப்பட்டனர்.*

தமிழ் இணையக் கல்விக்கழகம் - TAMIL VIRTUAL ACADEMY தேடல்... தகவல் பற்றி தொடர்புக்கு English

கல்வித் திட்டங்கள் | நூலகம் | கணித்தமிழ் | ஆய்வு மற்றும் உருவாக்கம் | தகவலாற்றுப்படை

முகப்பு > நூலகம் > நூல்கள் > பத்துப்பாட்டு மூலமும்

தொடக்கம்

பத்துப்பாட்டு மூலமும்

நச்சினார்க்கினியருரையும்

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி
டாக்டர் வே. சாமிநாதையரவர்கள்
பரிசோதித்து எழுதிய பலவகை ஆராய்ச்சிக் குறிப்புகளுடன்

தமிழ்ப்பல்கலைக் கழகம் தஞ்சாவூர். நிழற்படப்பதிப்பு - 1986

உள்ளே

Legacy Page பார்வை 1733

63-4. திரு மணி விளக்கம் காட்டி திண் ஞாண் எழினி வாங்கிய இரு அறை பள்ளியுள் அழகினையுடைய மாணிக்கமாகிய விளக்கை எரிய வைத்துத் திண்ணிய கயிற்றிற் றிரைவலையளைத்த புறவறைக்குள்ளறையிற் படுக்கைக்கண்ணே சென்று,

65-6. [உடம்பின் உரைக்கு முரையா நாவிற், படம்புகு மிலேச்சருழையராக ] உரையா நாவின் உடம்பின் உரைக்கும் படம் புகும் மிலேச்சர் உழையர் ஆக-வார்த்தை சொல்லாத நாவினையுடைய கையாலும் முகத்தாலும் வார்த்தைசொல்லும் சட்டையிடும் [2] சாவாசிகள் பள்ளி கொள்ளுமிடத்தைச் சூழ்ந்து திரிய.

உரையாநாவென்றார், ஊமைகளென்றற்கு.

67. மண்டு அமர் நசையொடு கண்படை பெறாஅது பகைவர் மனமறியாமல் மிக்குச்செல்கின்ற போரை நச்சுதலாலே கண்றுயிற்கப்பெறாமல்,

68-9. எடுத்து எறி எஃகம் பாய்தலின் புண் கூர்ந்து பிடி கணம் மறந்த வேழம் உள்ளியும் (72) ஒச்சி வெட்டுகின்ற வாளழுந்துகையினாலே புண்மிக்குப் பிடித்திரளைமறந்த வேழத்தை உள்ளியும்,

67-70. [வேழத்துப், பாம்புபதைப் பன்ன பருஉக்கை துமிய ] வேழத்து பருஉ கை பாம்பு பதைப்பன்ன துமிய-யானையினுடைய

1ஆணுடையையும் புடைவையென்பது பண்டைக்கால வழக்கு; "மெய்சூழ்ந்து......சென்றடைந்தார்" பெரிய. திருநா. 61 : இவ்வழக்கு செட்டிநாட்டில் இக்காலத்து உள்ளது.

2 (பி-ம்.) அசாரவாசிகள், சரவாசிகள்-சரித்துக்கொண்டே வசிப்போர்.

**காராளர் என்பதற்கு விளக்கமாக** :

காராளர்— 1. சூத்திரர். (பிங்கல. எஅ௦.) 2. பூவைசியர். (மணிமே,மலர்வநம்.உக.) (பிங்கல. எஎஎ.)

*1) முற்காலத்திருந்தஒரு முருட்டுச்சாதியார்.*

*2) சேலம் மலைவாசிகளானஒரு வேடச்சாதியார்*

*3) சூத்திரர். (பிங்.)*

*4) வேளாண் மக்களில் சில வகையினரை குறிக்க பல்வேறு தமிழ் இலக்கியங்களில் பல்வேறு பொருளில் ஆளப்பட்டுள்ளது.*

*5) வள்ளல் தன்மையைக் குறிக்கும் சொல்லாகவும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன .*

காராளர்

kārāḷar n. karāla. 1. Arude tribe of ancient times; முற்காலத்திருந்தஒரு முருட்டுச்சாதியார். **காராளர்** சண்டையில் (மணி. 7,102). 2. A tribe of hunters and cultivatorsin the hills of Salem and S. Arcot; சேலம்தென்னார்க்காடு ஜில்லாக்களிலுள்ள மலைவாசிகளானஒரு வேடச்சாதியார். (E. T.)




மனிதரில் நான்கு ஜாதிகள் உள்ளன என்பதை ஏற்கெனவே கூறியுள்ளேன்.

நான்காவது வருணத்தில் வேறுசில பிரிவுகளும் உள்ளன. தொழிலின் அடிப்படையில் அவர்கள் அழைக்கப்படுகிறார்கள். ஆடையை வெளுப்பவர், தோல் தைப்பவர், நடனமாடுபவர், ஓடக்காரர், வேடர் ஆகிய பிரிவினர் அடங்குவர். எல்லா உயிர்களுக்கும் சில பொதுவான குண இயல்புகள் உள்ளன. உறக்கம், விழிப்பு, உண்ணுதல், அச்சம், கோபம், புணர்ச்சி ஆகியவை எல்லா உயிர்களிடத்தும் காணப்படுகின்றன. ஞானம் மட்டுமே எல்லா உயிர்களுக்கும் பொதுவாக அமைவதில்லை.

பல உலகங்கள் உள்ளன. சில உலக மக்கள் ஒரு காலை மட்டுமே உடையவர்களாய் இருக்கிறார்கள். சில உலகங்களில் இரண்டு கால்கள் உடையவர்களாக இருக்கிறார்கள். சில உலகங்களில் பல கால்களை உடைய மனிதர்களும் உள்ளனர். எந்த உலகில் முனிவர்கள், யோகிகள், முன்னோர்களை

***நான்காவது வருணம் என்பதற்கு விளக்கமாக :***

***வேடன் , சூத்திரன் , வேளாளன்***

*தொல்காப்பிய மரபியல் , "வைசியகன் பெறுமே வணிகவாழ்க்கை ' என்று அறுதியிட்டு உரைப்பதுபோலக் கூறுகிறது . இனிச் சூத்திரர் என்ற சொல்லோ வருணாசிரமதர்மத்தில் அதற்குத் தருகின்ற விளக்கமோ தொல்காப்பியத்தில் காணப்படவில்லை. மாறாக, நான்காவது வருணம் என்ற அந்த இடத்தில் 'வேளாளர்' என்பவர்களைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.*

## *திருமங்கையாழ்வார் வரலாறு*

* திருமங்கை மன்னர் மதயானைகளை கொண்ட பெரும்படையின் தலைவன் என திவ்ய சூரி சரிதம் எனும் பழைய நூல் கூறுகிறது.

* போர்களில் பங்கேற்று, எதிரிகளுக்கு எமனைப்போன்று வீரம் காட்டியதால் பரகாலன் என போற்றப்படுகிறார்.

* திருமங்கை ஆழ்வார் மிகப்பெரிய சேனையை கொண்டிருந்ததாகவும், யானைப்படையை வழிநடத்துவதில் வல்லவர் என்றும் பெரிய திருவாய்மொழி பாடல்கள் கூறுகின்றது.

("வாட்டிறற் றானை மங்கையர் தலைவன்":- பெரிய திருவாய்மொழி 10,9,10)( "அமரிற் கடமா களியானைவலான்":- 2,4,10)/ " கடமாருங் கருங்களிறு வல்லான் வெல்போர் கலிகன்றி" :- 2,5,10)

* பெரிய குதிரை வீரரென்றும், வில் வித்தையில் எதிரிகளை வெல்பவர் என்றும் பெரிய திருவாய்மொழி பாடுகிறது.

("ஒன்னலர் தங்களை வெல்லும் ஆடல்மாவலன்" :- 5,8,10)/ "மருவலர்தம் உடல்துணிய வாள் வீசும் பரகாலன்":- 3,9,10)

* வைணவத் திருப்பணிகளில் ஈடுபட்டதால் சோழ மன்னருக்கு கப்பம் செலுத்த இயலாமல் சோழனின் கோபத்துக்கு ஆளானார் திருமங்கை மன்னன். சோழ மன்னர் திருமங்கை மன்னருக்கு எதிராக சண்டீசுவரன் எனும் தளபதி தலைமையில் படையை அனுப்பினார். ஆனால் திருமங்கை ஆழ்வார் " ஆடல்மா" எனும் தனது குதிரையின் மேலேறி போரிட்டு சோழர் படைகளை புறமுதுகு கண்டார். வாளை வீசி யானைகளின் பனை போன்ற துதிக்கைகளை வெட்டி, யானையின் மத்தகங்களை (யானையின் நெற்றி) பிளந்து,கிம்புரி எனும் அணிபூண்ட தந்தங்களை அறுத்து, குதிரைப்படையை அழித்து சோழரின் படைகளை திருமங்கை மன்னன் புறங்கண்டார் என பரகாலன் சருக்கம் கூறுகிறது.. வைணவ பணிகளில் ஈடுபட்ட போதும் கள்ளர் மரபின் வீரம் குறையவில்லை.

* திருமங்கை ஆழ்வாரின் யானையின் பெயர் கடமா களியானை ஆகும்.

## தமிழ் வேதங்களில் பங்களிப்பு:-

* ஆசு, மதுரம், சித்தம், விஸ்தாரம் ஆகிய நான்கு நடைகளில் கவிதைகளை இயற்றும் திறன் பெற்று இருந்ததால் நாற்கவிப்பெருமாள் எனும் பட்டத்தை பெற்றார்.

* தமிழ் வேதங்கள் என அழைக்கப்படும் வைணவ இலக்கியமான நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் அதிக (1361) பாடல்களை பாடிய பெருமைக்கு உரியவர். இவர் படைத்த பாசுரங்கள் பின்வருவன:-

திருவெழுக்கூற்றிருக்கை (ஒரு பாடல் - 47 அடிகள்)
சிறிய திருமடல் (ஒரு பாடல் - 155 அடிகள்)
பெரிய திருமடல் (ஒரு பாடல் - 297 அடிகள்) திருநெடுந்தாண்டகம் (30 பாடல்கள்)
திருக்குறுந் தாண்டகம் (20 பாடல்கள்)
பெரிய திருமொழி (1084 பாடல்கள்)



*ஆலிநாடர், சோழனின் படைத் தலைவராக இருந்தா ர். நீலன் கற்க வேண்டியவற்றைக் கற்று , வடமொழியிலும் தமிழிலும் புலமை பெற்று ஒப்பாரும் மிக்காரும் இல்லாத நிலைபெற்று வளர்ந்தார்.*

*திருமாலடியாரான அவர் திருமாலின் திருவருளாலே ஆசுகவி , மதுரகவி, சித்திரகவி, விஸ்த்தாரக்கவி என நான்கு வகைக் கவிகளையும் பாடும் திறமையும் வல்லமையும் பெற்றிருந்தார்.*

*கள்ளர் என்னும் வீரர் மரபில் தோன்றியவர் என்பதால் , வாள், வில், வேல் முதலிய படைக் கலங்களை பயன்படுத் தி போர் செய்வதில் வல்லவராகத் திகழ்தார் . பகைவரை சுலபமாக வெற்றி கொள்ளும் தன்மை அவருக்கு வாய்க்கப் பெற்றிருந்தது . நீலனின் கல்வி திறமை வீரத்தை கண்ட சோழ மன்னன் அவரைத் தன் படைத் தளபதியாக ஆக்கிக் கொண்டான்.*

*அந்தக் காலத்தில் 'நாலுகவிப் பெருமான்' என்னும் சிறப்புடைய புலவன் , நீலனிடம் வாதிட்டு தோல்வியைத் தழுவினான். எனவே தன் பட்டத்தினை , நீலருக்கு இட்டு, 'நாற்கவிப் பெருமான்' என்கிற விருதை அவருக்கு அளித்தான்.*

*இதையறிந்த சோழ மன்னன் , நீலரை அழைத்து அவருக்கு மேலும் விருதுகளை அளித்துப் பாராட்டினான்.*

*பின்னர் நீலர் அந்தச் சோ ழனுக்காக போர்கள் பலவற்றை மேற்கொண்டு எதிரிகளை விரட்டி வெற்றிவாகை சூடினார் . இதனால் மகிழ்ந்த சோழ மன்னன் , நீலரின் வீரத்தையும் அறிவுக் கூர்மையையும் வியந்து பாராட்டி , தன்னுடைய ஆட்சியின் கீழ் இருந்த திருமங்கை நாட்டுக்கு மன்னனாக்கி மகிழ்ந்தான்.*

*திருமங்கைக்கு நீ லர் மன்னரானதும் அவரை எல்லோரும் 'திருமங்கை மன்னன் ' என்றே அழைக்கலாயினர்.*



*திருமாலடியாரும், திருநாங்கூரில் வசித்து வருபவருமாகிய மருத்துவர் அவரது மகள் குமுதவல்லியைப் பற்றிய செய்தி பரகாலரை எட்டியது . அவர் திருநாங்கூரிலுள்ள மருத்துவர் இல்லத்துக்குச் சென்று, குமுதவல்லியைத் தனக்குத் திருமணம் செய்து தர வேண்டும் என்று விண்ணப்பித்தார்.*

*பெண்ணோ பிராமணப் பெண். பரகாலர் கள்ளர் ஜாதி. இருந்தும் தந்தை, பெண்ணுக்கு சம்மதம் என்றால் எனக்கு ஆட்சேபணை இல்லை என்று சொல்லிவிட்டார்.*

*ஆனால் குமுதவல்லியாரோ, 'திருவிலச்சினையும், திருநாமமும் உள்ள வைணவனுக்கு அன்றி மற்றவர்க்கு என்னைப் பேசவிடேன்' என்று மறுத்துரைத்தாள்.*

*மேலும் நாள்தோறும் ஆயிரத்தெட்டு ஸ்ரீவைணவர்களை அமுது செய்வித்து , அவர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தமும் தளிகைப் பிரசாதமும் ஏற்றுக்கொள்ள மொழிந்தாள்.*

*இந்த இரண்டையும் செய்வதாக நீலரும் ஒப்புக் கொண்டார் , அதன்படி அவரது முதல் கடனை முதலில் நிறைவு செய்தார்.*

*இறைவனையே குருவாகக் கொண்டு , அவர் மூலம் பஞ்ச சம்ஸ்காரம் பெற்ற ஒருவர் நீலர்தான்.*

*குமுதவல்லியாரை அவள் பெற்றோர் திருமங்கை மன்னருக்கு நாடும் ஊரும் அறிய நல்லதோர் நாளில் மணம் செய்து கொடுத்தார்கள்.*

*திருமங்கை மன்னன் அரசுக்குச் சேர வேண்டிய பகுதிப் பணம் விரைந்து வந்தாக வேண்டும் என்னும் செய்தி தாங்கிய ஓலையுடன் , தன் தூதுவர்களை திருமங்கை மன்னனிடம் அனுப்பினான் சோழமன்னன்.*

*திருமங்கை சென்ற தூதுவர்கள் பகுதிப் பணத்தை விரைவில் தருமாறு பரகாலரை வற்புறுத்தினார்கள். பரகாலருக்குக் கடுங்கோபம் ஏற்பட்டது. விளைவு - தூதுவர்களை அடித்து விரட்டினார்.*

*சேனாதிபதியும் யானை , குதிரை, காலாட் படைகளுடன் சென்று பரகாலரை வளைத்துப் பிடிக்கப் போனான். மங்கை மன்னனோ தன் குதிரையின் மேலேறித் தம் படைகளுடன் வந்து , சேனைகளை எல்லாம் துரத்தியோட்டிவிட்டார்.*

*மீண்டும் சதுரங்க சேனைகளுடன் வந்து பரகாலரை வளைத்தனர். பரகாலரும் வாளின் பலத்தினால் படையை அழிக்கத் தொடங்கினார்.*



*இதனைக் கண்ட அரசன் இவரைப் பார்த்து, 'நீர் எதற்கும் அஞ்ச வேண்டுவதில்லை. உமது வீரம் கண்டு மகிழ்ந்தேன். நீர் செய்த தவறுகளை எல்லாம் மறந்தேன் . அஞ்சாமல் என்னை நம்பி வாரும்' என்று அழைத்தான். பரகாலரும் அரசன் மீதான பகைமை மறந்து உடன் சென்றார்.*

*அரசனும் பரகாலரை நோக்கி , ' தரவேண்டிய பகுதிப் பணத்தை தந்துவிட வேண்டும் , அதுவரையில் அமைச்சர்களின் பாதுகாவலில் பரகாவலர் இருக்க வேண்டும் ' எனவும்*

*பணித்தார். அமைச்சர்களும் பரகாலரைப் பிடித்துக்கொண்டு , ஒரு தேவாலயத்தில் சிறை வைத்தனர்.*

*திருமங்கை மன்னரது கனவில் பேரருளாளப் பெருமான் எழுந் தருளி, 'உமது பகுதிக்கு வர வேண்டிய பணம் நாம் தருகிறோம் . காஞ்சிபுரத்துக்கு வாரும்' என்று அருளினார். பரகாலரும் மறுநாள் அமைச்சர்களிடம், 'காஞ்சிபுரம் வந்தால் உங்கள் பகுதியைத் தருகிறேன்' என்றார்.*

*அமைச்சர்கள் அதனை அரசரிடம் தெரிவித்தனர். அரசரும் இதற்கு உடன்பட்டு, தக்க காவலுடன் பரகாலரை காஞ்சிபுரத்துக்கு அனுப்பி வைத்தார்.*

*காஞ்சிபுரம் சென்ற பரகாலர், புதையல் பொருளைக் காணாது வருந்திக் கிடந்தார். அவருடைய வருத்தமுற்ற மனத்தை மகிழ்விக்க எண்ணிய காஞ்சி பேரருளா ளப் பெருமான், 'அஞ்சாது நீர் அதை எடுத்துக் கொள்ளும் ' என்று பணம் இருக்கும் இடத்தை அடையாளமாகக் காட்டியருளினான்.*

*வேகவதி நதிக்கரையில் அவருக்குப் புதையல் கிடைத்தது. பேரருளாளன் காட்டிய இடத்துக்குச் சென்ற பரகாலர், அங்கே பணம் இருக்கக் கண்டு , அதை எடுத்து கப்பம் செ லுத்த வேண்டிய பணத்தைக் கொடுத்துவிட்டு , அதுபோக மீதி இருந்த பணத்தை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உணவளிப்பதற்காக வைத்துக் கொண்டார்.*

*நடந்த நிகழ்ச்சியை அரசனுக்கு அறிவித்த அமைச்சர், அரசர் முன்பாக திருமங்கை மன்னர் தந்த கப்பப் பணத்தை வைத்தார் . வேந்தனோ, காஞ்சி அருளாளப் பெ ருமானான வரதராஜப் பெருமாளே பணம் தந்த செய்தியைக் கேட்டு பெருவியப்படைந்தான் . இவர் மனிதர்களுள் மேம்பட்ட பெருமை கொண்டவர் ; அவரை மதியாமல் இப்படி நடந்துகொண்டோமே என்று வருந்தினான்.*

*காஞ்சிப் பேரருளாளன் அளித்த கப்பப் பணத்தை தனது கருவூலத்தில் சேர்க்க அவனுக்கு மனம் வரவில்லை. எனவே திருமங்கை மன்னரை அழைத்தான் . அவரிடமே அப்பணத்தையும் , சிறப்பாக வெகுமதிகளையும் அளித்து அவற்றை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உணவிட வைத்துக் கொள்ளுமாறு வேண்டினான். அதன் மூலம், திருமங்கை மன்னரை மூன்று தினங்கள் பட்டினி போட்ட பாவத்தைப் போக்கிக் கொண்டான் . திருமங்கை மன்னன் தன் ததியாராதனப் பணியைத் தொடர்ந்தார்.*

*ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ததீயாராதனம் குறைவற நடைபெற்று வந்தது . ஆனால், ஆழ்வாரின் கருவூலத்தில் இருந்த திரவியமோ குறைவுற்று வந்தது . பணம் யாவும் செலவழிந்ததும் , திருமங்கை மன்னன் ததீயாராதனம் தொடர்ந்து நடைபெற என்ன வழி என்று யோசிக்கலானார்.*



*பரகாலன் ஒரு வினோதமான முடிவெடுத்தார் . செல்வந்தர்களிடமிருந்து பணத்தைப் வழிப்பறித்து அன்னதானம் செய்ய கூட்டாளிகளை உடன் வைத்துக் கொண்டு வழிப்பறி செய்தார்.*

*திருமந்திர அர்த்தம் விளங்கப் பெற்ற பரகாலன் , தாம் அறிந்த திருமந்திரத்தையும் , அதற்கு உள்ளீடான ஸ்ரீமந் நாராயணனுடைய வடிவமாகிய உருவத்தையு ம் அருள்மாரி என்னும் பெரிய பிராட்டியின் அருளாலே நேரில் கண்டு தரிசித்து திருமங்கை ஆழ்வாரானார்.*

*திருமங்கை ஆழ்வாரின் பிரமிப்பூட்டும் பாடல்களில் இது ஒன்று.*

***கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோள் ஒன்றிலாமையினால்***
***என்றேனும் இரந்தார்க்கு இனிதாக உரைத்தறியேன்***
***குன்றேய் மேகமதிர் குளிர்மாவேங்கடவா***
***அன்றே வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே***

*காரணமில்லாமல் பல உயிர்களைக் கொன்றேன் . என்னிடம் வந்து யாசகம் கேட்டவர்களிடம் இனிமையாக பேசக்கூட இல்லை . வேங்கடப் பெருமானே உன்னை வந்தடைந்து விட்டேன் என்னை ஆட்கொள்வாய்.*

*கஷ்டத்தில் இரு ப்பவர்களிடம் இனிமையாகப் பேசினால்கூடப் போதும் . அதற்கும் நேரமில்லாமல் பல உயிர்களைக் காரணமில்லாமல் துன்புறுத்தியிருக்கிறேன் என்று தப்பை ஒப்புக் கொள்வதற்கு மிகுந்த மன முதிர்ச்சி வேண்டும்.*

*திருமால் திருத்தல தரிசனம் செய்யும் அவா மிகப் பெற்றார் . தலங்கள் தோறும் சென்று, ஆங்காங்கு எழுந்தருளியுள்ள திருமாலை வணங்கிப் பின் சோழ மண்டலத்துக்கு எழுந்தருளினார்.*

*திருமங்கை ஆழ்வார் பல தலங்கள் தோறும் சென்று தலத்து இறைவனைச் சேவித்து திருவரங்கம் வந்தார். அங்குள்ள பெரிய பெருமாளுக்கும் அழகிய மணவாளனுக்கும் விமானம் , மண்டபம், திருத்தளிகை, திருமதில், கோபுரம் முதலிய தொண்டுகள் செய்ய விரும்பினார் . அதற்காக நாகப்பட்டினம் சென்று பெரும் பொன்னை எடுத்து வந்தார் ; அதனை விற்றுப் பெற்ற பொருளைக் கொண்டு விமானம், மண்டபம் முதலியன கட்டுவித்தார்.*

*இதனைக் கண்ட தொண்டரடிப்பொடி ஆழ்வார் , மலர் பறிக்கும் தமது ஆயுதத்துக்கு திருமங்கை மன்னருடைய பெயர்களுள் ஒன்றான 'அருள்மாரி' என்னும் பெயரினை இட்டு மகிழ்ந்தார்.*

*நாலாயிர திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களின் எண்ணிக்கையில் திருமங்கையாழ்வாரின் பங்கு கணிசமானது.கவித்துவமாக, இலக்கணப்படி அமைந்த பல வகைப் பாடல்களையும் இயற்றியுள்ளார். பெரும்பாலான திவ்விய தேசங்களையும் பாடியிருக்கிறார்.*

https://kallarkulavaralaru.blogspot.com/2018/07/blog-post_10.html

நன்றி